*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




…ன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEYA JAYATE.**

புத்தகம். 20.] **1913**ஸு மார்ச்சுமீ, பரீதாபிஸு பங்குனிமீ [சஞ்சிகை. 12.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

S Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அத்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசித்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுக்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேஉரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் படாஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றோதினன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்


விவேக

சிந்தாமணி.


## Wrong Multiplies Itself.

### "குதிரை தூக்கிப் போட்டதுமன்றி குழியுமொன்று கூடப்பறித்ததாம்".

———:++:———

"ஆரியன் அல்லன் குதிரையிரண்டுள
வீசிப்பிடிக்கும்விரகறிவாரில்லை
கூரியநாதன்குருவினருள்பெற்றால்
வாரிப்பிடிக்கவசப்படுந்தானே."—திருமந்திரம்.

எல்லா வித்தைகளிலும் ஆனையேற்றம் குதிரை யேற்றம் சிறந்த வித்தையாம். ஆனை மதம்பிடித்தால் அதை அடக்குதல் கூடாத காரியமாம். ஆகையால் ஆனையேறத் துணிந்து முன்வரும் தீரன் அதன் குணகுணங்களை யறிந்து அதைப் பக்குவமாகத்தானே அடக்கி யாளத்தக்க சூக்ஷ்மபுத்தி யுடையவனாயிருக்க வேண்டும். முரட்டு பலம் ஆனையினிடத்தில் பலிக்காது. ஆனை ஆவரணசக்தியை ஒத்தது. ஆவரணம் என்றால் அறிவை மறைப்பது. அறிவை மறைப்பது அஹம்பாவம். அஹம்பாவ மற்றால் ஆவரணமில்லை. அஹம்பாவ முண்டேல் ஆனைக்கு மதம் பிடிப்பது சகஜம் போலாம். அறிவு மயங்கினால், ஆனை மதங்கொண்டாற்போல் தான். ஆகையால் ஜன சமஷ்டி முறையில் புகுந்துழைப்பவர்களுக்கு அறிவு மயக்கம் உண்டாகாதபடி பாதுகாத்துக் கொள்ளும் சக்தி மிகவும்வேண்டும். அப்பொழுது தான் அவர்கள் "மன்பதை செப்பம் செய்யும்" ஆற்றலுடையவர்களாவார்கள்.

அறிவுமயங்காமலிருக்க, நரஸ்துதியும் முகஸ்துதியும் செய்கிறவர்களை விஷமாக நினைத்து விலக்கவேண்டும். முன்னொரு காலத்தில் ஆங்கில நாட்டில் கான்யூட் (King Canute) என்னு மோர் அரசன் இருந்தான். அவன் மஹா புத்திசாலியாக விருந்ததோடு நல்ல விவேகம் முதிர்ந்தவனாகவு மிருந்தான். அவன் மந்திரி முதலான இராஜ பரிவாரங்கள் அவனை யெப்போதும் நரஸ்துதி முகஸ்துதி செய்வது அவனுக்குப் பொறுக்க முடியாத சங்கடமாயிருந்தது. அவன் எவ்வளவு தான் ஜாடை மாடையாக அவர்களை அடக்கியும் அவர்கள் ந்குவதாயில்லை. ஒரு நாள் அவருடைய ட்டுத்யோகஸ்தர்கள் அவனை வரம்பு து ஸ்துதிசெய்து இந்திரன் சந்திரன் ம் சமுத்திரமும் தங்கள் ஆணையை மீறிவாதென்றும் ஸ்துத்தியம் செய்தார்கள். னையவன் நீங்கள் என்னைப் பொய் ஸ்துதி செது எனக்கு ஹிதமாயில்லை யென்று உறத்துசான்னான். உடனே யெல்லாரும் பயந்தாங்கள் அப்படி யெல்லாம் இராஜ ஸந்நிதியில் சொல்லப் பட்டவர்களில்லை" யென்றானும் தங்கள் தொழிலையே பற்றி நின்றார்கள்

இவர்களுடைய முட்டாள்தனத்தை ஸ க்கமாட்டாதவனாய் அரசன் உடனே தனது ம்மாஸனத்தைக் கடலோரம் கொணர்ந்துபோடும் படியும் அங்கே கொலு வீற்றிருக்கப்போவதாகவும் உத்தரவுசெய்தான். இராஜ சபைக்கு எல்லாரும் வந்தார்கள். சமுத்திரத்தில் அலை யடிக்கிற கரையோரமாக தன்ஸிம்மாஸனத்தையிட்டு அதில் தான் இராஜ கோலத்தோடு வீற்றிருந்து "எனது மந்திரி முதலானவர்களெல்லாரும் இந்த சமுத்திரமும் என் ஆணைக்கு அடங்கி நடக்குமென்று சொல்கிறார்கள். ஆகையால்," ஓ சமுத்ரமே! உன் அலைகளை அடக்கியாளு! என்று கட்டளையிட்டான். அரசன் கட்டளைக்கு பயந்து அலைகள் எட்டி நின்றுபோய்விடவில்லை. அவை சுபாவம்போல் கரையில் மோதி அரசன் ஸிம்மாஸனத்திலும் அரசன் பேரிலும்கூட மோதி யடித்தன.

அரசன் கண்ணில் பொறி பறக்க மந்திரிமார்களைப் பார்த்தான். உங்கள் பேச்சைக்கேட்டு நான் இன்று இந்த அற்பமான கடலையால் அவமானப்பட்டேன். இந்த அற்ப விஷயத்தில் உண்மையான ஆலோசனை சொல்லமாட்டாத நீங்களா எனக்கு அபாரமான இராஜ்ய விஷயங்களில் உண்மையான மந்திராலோசனை சொல்லப் போகிறீர்கள்! என்று உறுத்துக்கேட்டு வெறித்துப் பார்த்தான். எல்லாரும் நடு நடுங்கிப் போனார்கள். அது முதல் அரசனை வீண் ஸ்துத்யம் செய்வது ஆபத்தாய் முடியுமென்று அறிந்து கொண்டார்கள்.

இப்படி புலன் வழியே செல்லும் மனத்தை அடக்கியாள்வதும் கஷ்டமாம். விஷயப்பற்று என்னும் விஷமேற வற, விஷயாபிமானம் என்கிற துச்சங்க சகவாசத்தால், மனம் அறிவைக்கெடுத்து விடுகிறது. ஆகையால் புலன் வழிபோகும் மனதை குதிரையேற்றம் பழக்குகிறதுபோல சித்தவிருத்திநிரோதமென்கிற லகானிட்டுப் பிடித்துப் பழக்கல் வேண்டும்.

மனம் விவேகமனம் என்றும் அவிவேக மனம் என்றும் இருவிதமாம். முன்னது உத்தமம், பின்னது அதமம். பொறி புலன்வழி செல்லும் மனத்தைக் குதிரையாக உவமித்து. ஆரியன், அல்லன் என இருவிதமாகக் கூறினார். விஷயத்தைவிட்டமனம் விவேகத்தைப் பற்றும். அது ஆரியன் ஆகும். விவேகமற்ற மனம் விஷயத்தைப்பற்றும், அது ஆரியன் அல்லன் ஆகும்.

இப்படி இருவகைப்பட்ட மனத்தை வீசிப் பிடிக்கும் விரகறிவாரில்லை. ஏகாக்ர நிலைபெற்று அலையு மனத்தை யடக்கும் ஆற்றல் பெற்ற சாதனும் மனவிருளைப்போக்கும் குருவினருள் பெற்றால், குதிரையின் உச்சியிலுள்ள மயிரை வாரிப்பிடிக்க எப்படிக் குதிரை வசப்படுமோ அப்படிப்போல மனச்சேஷ்டைக் கெல்லாம் உச்சி மயிராயுள்ள "சங்கல்ப மூலம்" என்ற மயிரைவாரிக்கை வாரிப்பிடிக்க மனம் தானே வசப்படும். இந்த உபாயம் தெரியாதவர்களுக்கு அது கைவசப்படாது. மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குமது "பொய்யரைத் துள்ளி விழுத்திடுந்தானே."

"தன்னைத் தானெஞ்சம் கரியாகத் தானடங்கிற், பின்னைத் தானெய்தாற் பயனில்லை, தன்னைக்-குடி கெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யிற், பிடிபடுக்கப்பட்ட களிறு" என்றார் மேலோரும்.

மனதை விவேகஞானத்தால் நிதானப்படுத்தி அடக்காது விட்டால் அது தூக்கிப்போட்டுக் கீழே தள்ளுவதுமின்றி குழியுமொன்று கூடப்பறிக்கும்.

அவிவேகர்கள் சகவாசம் ஆபத்துக்கிடமாம். ஆனால் அவர்களை விட்டொழித்தலும் முடியாமையாம். பின்னை யென்னதான் செய்வதென்றால், தாமரை யிலையில் தண்ணீர்போல், ஹிருதய சுத்தியினால் தூய்மைபெற்ற தஹராகாசத்தில் குருநாதப் பூஜைசெய்து குருவருள் பெற்று மனிதரிடத்து சூத்திரம் பாராட்டாது, "சார்ந்தனையும் அல்லனவே செய்திடினுந் தாமவரை ஆர்ந்தனையும் காப்பர் அறிவுடையோர்" என்ற ஆன்றோர் வசனத்தை யுன்னித் தனக்குத் தீங்கே யிழைத்துவரும் அறிவிலிகளிடத்தும் கருணைபாலித்து ஜகதீசன் அவர் மனவிருளைப் போக்குவாராக வென்று அவரிடத்து உள்ளன்பு பாராட்டி அவர்கள் செய்யுந்தீங்கு தன்னை யொட்டாதபடி பாதுகாத்துக் கொண்டு அவர்களுக்கு நன்மையையே செய்ய வழி தேடல் வேண்டும். இதுவே உத்தம வழியாம்.

"மர்மமப்பா சொல்வதைக்கேள்தர்மவழிபற்றிநில்லாய்
வர்யமப்பாவெல்வதில்லைவாயாலொன்றுமாவதில்லை
கர்மமப்பாசேர்ல்வதுன்னைக்கனமோகம்கெடுப்பது
[உங்காண்
தர்மமப்பாசொல்வதைக்கேள்தாரமாகுமந்திரமீது".

என்பது தேவி வாக்கு. இதற்குமேல் சொல்ல நமக்கு ஒன்றும் இடமில்லை.

ஓம் தத்ஸத்.

## The Law of Life alone Couquers.

### தருமமே தலைகாக்கும்.

:o:

(249-ம் பக்கத் தொடர்ச்சி)

"காமப்பேய்"

சகாரனது வண்டி வசந்தசேனையை ஏற்றிக்கொண்டு தோட்டம் போய்ச்சேர்ந்ததென முன் கூறினோமே. வண்டி வந்தது கண்டு தோட்டத்திலிருந்த சகாரன் அதிலேறிக் கொள்ளும்படி சென்று கதவைத்திறக்க, வண்டியிலிருந்த வசந்த சேனையைப்பார்த்து, தன்மேல் ஆசைகொண்டே அம்மின்னொளி தன்னிடம் நண்ணினளென எண்ணி, புன்னகை கொண்டு இன்னமுதொழுகப் பன்னிப்பேசித் தன்னபராதங்களை மன்னித்துத் தயைசெய்ய வேண்டுமென வேண்டிக்கொண்டனன். அது கேட்டு அப்பெண்மணி அவனைச் சிறிதும் கண்ணெடுத்துப் பாராமல் காலால் உதைத்துத் தள்ளினாள். அதுகண்டு அவன் மிகக் கோபங்கொண்டு வசந்தசேனையை வண்டியினின்று இழுத்துக் கீழே தள்ளி அடித்துப் புடைத்தான். அந்த அடி தாளாமல் அம்மடமயில் மூர்ச்சை போயினாள். சிறிது நேரம் பேச்சு ஒன்று மில்லாமலிருந்தது; அதுகண்டு சகாரன் அவள் இறந்து போயினாளென்று எண்ணி மிகவும் அச்சங்கொண்டு அருகே யிருந்த சருகுகளை யெடுத்து அவளை மூடிவிட்டு, அந்தப் பழியைச் சாருதத்தன்மேல் சுமத்தவேண்டுமென நினைத்துச் சரேலென்று வண்டியிலேறிக் கொண்டு வீட்டிற்குப் போய்விட்டான். வீடு போய்ச் சேர்ந்து வண்டிக்காரன் ஒருவேளை இச்செய்தியை வெளியிட்டு விடுவானோவென்று பயந்து அவனை விலங்கிட்டுத் தன் வீட்டு மேல் மாடியிலே ஒருவர் கண்ணிலும் அகப்படாமல் சிறையாக்கி வைத்து, சாருதத்தன் மேல் பிரியாது செய்யவேண்டுமென்று அதற்கு வேண்டிய முயற்சி செய்து கொண்டிருந்தான்.

"ஆபத்பாந்தவன்"

சகாரன் அப்புறம் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு சன்னியாசி அந்தத் தோட்டத்து வாசலில் நீராடவந்தான். அவன் அதில் தன் ஆடையைத் தோய்த்து உலர்த்துவதற்காக வசந்த சேனையை மூடிவைத்திருந்தமேடான விடத்திற்குச்செல்ல, அதின் மேல் மின்னற்கொடிபோன்ற மெல்லிய கையொன்று தோன்றியது கண்டு இதென்னவென்று அந்தச் சருகுகளை தள்ளிப்பார்த்தான்; முன் ஒரு தருணத்தில் ஆபத்து வேளையில் தனக்குக் கைகொடுத்துக் காப்பாற்றின உத்தமியான வசந்த சேனையெனத் தெரிந்தது. அப்பொழுதுதான் அவளுக்கு மூர்ச்சை தெளிந்து சிறிது பிரஜ்ஞை வந்தது. நாக்கை நீட்டி நீட்டித் தண்ணீருக்குத் தவித்தாள். தண்ணீர் சமீபத்திலில்லாமல் போகவே சன்னியாசி தனது காஷாயத்தைத் தோய்த்துக்கொண்டு வந்து பிழிந்து அந்த ஈரவாடையால் மெல்ல விசிறி மயக்கம் தெளியச் செய்தான். பிரஞ்ஞை வந்து பேசத் திறமையுண்டான வுடனே அவள் சன்னியாசியை நோக்கி, நீர்யார் என்று வினவ, அவன் 'உனக்கு இப்பொழுது அத்தனையாக நினைவிராது; முன் ஒருகால் பத்து வராகன் கொடுத்து நீ யென்னைக் காப்பாற்றினவளல்லவா? இப்பொழுது உனக்கு இத்தன்மையான துன்பம் நேரிட்டது யாதுகாரணம் என்றுகூற, அவள், அவனைக் கையெடுத்துக் கும்பிட்டு "ஸ்வாமி, இது அடியாள் வேசியாய்ப் பிறந்ததின் பயன்" என்றாள். அதுகேட்டுச் சன்னியாசிமிகவும் பரிதாபமுற்று அவளை மெல்லத் தன் மடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், ஆபத்து வேளையில் கைம்மாறு கருதாமல் தனக்கு உதவிபுரிந்த உத்தமிக்கு நாம் கடன் தீர்த்துக்கொள்ள இது நமக்கு நல்ல தருணமாக வாய்த்ததென்று வெகு சந்தோஷத்துடனே, தன் மடத்திலுள்ள கன்னியாப் பெண்களைக் கொண்டு பலவிதமாய் அவளுக்கு உபசாரங்கள் செய்து ஆதரித்தான்.

"தெய்வ சங்கல்பம்,"

சாருதத்தன் கதை யென்னவென்பீர்களோ, தன் வண்டியில் வசந்த சேனையை யேற்றி அழைத்துக் கொண்டுவரும்படி திட்டம் செய்து அவன் புஷ்பகாண்டக வனத்திற்குச் சென்றானென்று கூறினோமே மெத்தைபோட்டுக் கொண்டுவரும்படி போயிருந்த வண்டி வாயிலில் வந்து நின்றவுடனே, அத்தருணத்தில் அங்கே வந்திருந்த ஆரியகன் என்பவன் அவ்வண்டியிலேறிக் கதவை மூடிக்கொண்டான். வசந்தசேனைதா னேறிக்கொண்டா ளென்று எண்ணி வண்டிக்காரன் வண்டியை ஓட்டிக் கொண்டுபோய் விட்டான்.

"ஆரியகன்"

அந்த ஆரியகன் யாவனெனில் உஜ்ஜயினி நகருக்கு அருகில் ஓர் ஆயர்பாடியிலுள்ள ஒரு செல்வச் சிறுவன்; அவனே அந்நகருக்கு அரசனாகப் போகிறானென்று தீர்க்கதரிசி யொருவர் சொல்லியது கேட்டு அநேகர் அவனை யடுத்திருந்தார்கள். அவன் அரசனாகப்போகிறானென்ற செய்தி தெரிந்தவுடனே அக்காலத் தரசனான பாலகனென்பவன் அவன் மேல் பகைகொண்டு அவனைப் பிடித்துச் சிறைசெய்ய வழிதேடிக்கொண்டே யிருந்து, சகாரனது வண்டியில் வசந்தசேனை ஏறிச் சென்றதற்கு முதனாள் அவனைப் பிடித்துச் சிறைசெய்து விலங்கடித்து விட்டான். இவ்விதமாய் அவன் சிறையினின்றும் வெளிப்பட்ட செய்தி உடனே அரசனுக்குத் தெரிய தக்ஷணமே நகரத்தைச் சுற்றிக் காவல்வைத்து எவ்வகையிலேனும் அவனைப்பிடிக்க வேண்டுமென்று விளம்பரஞ் செய்தனன். அதுபற்றி அன்று காலையில் அந்தப் பட்டணமெங்கும் கட்டுங் காவலுமாய் உல்லோல கல்லோலமாக இருந்தது. அதுகண்டு ஆரியகன் இன்னது செய்கிறதென்று தோன்றாமல் வீதிவழியே வந்து சாருதத்தன் வீடு திறந்திருப்பது தெரிந்து அதில் புகுந்து, நாம் எவ்வாறு தப்பித்துக்கொண்டு வெளியே போகிறதென்று யோசித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது சாருதத்தன் வண்டி வாயலில் வந்துநிற்க, தனக்குத்தான் தப்பித்துக்கொண்டு போகஸ்வாமி வண்டிகொடுத்தனுப்பினாரென்று ஆரியகன் அதிலேறிக்கொண்டு போகிறான்.

"தெய்வானுகூலம்"

வண்டி கோட்டைவாயில் வழியாகச் செல்லும் பொழுது அங்கே காவல்காத்திருந்தவர்கள் வண்டியைச் சோதனைசெய்ய வந்தார்கள். வண்டி சாருதத்தனுடையதென்றும் வண்டியிலிருப்பவள் வசந்தசேனை யென்றும் வண்டிக்காரன் கூறினான். ஆயினும் அவர்கள் நேராக பார்க்கவேண்டு மென்று சொல்ல, அவர்களுள் ஒருவனான சந்தனகன் என்பவன் வண்டியைத் திறந்து பார்த்தான். தாங்கள் தேடிப்பிடிக்க காத்திருந்த ஆரியகனே வண்டியிலுட்கார்ந்துகொண்டிருக்கிறானெனத் தெரிந்தது. ஐயோ! இப்பொழுது ஆரியகன் என்னசெய்வான்! வேறு வழியில்லாமல் அவன் சந்தனகனைச் சரணமடைந்தான். சந்தனகன், ஆரியகன் முதலியோருக்கு நேசனாகையால், அவன் எவ்வகையிலேனும் காப்பாற்ற வேண்டும்; காட்டிக் கொடுக்கக் கூடாதென்று தீர்மானித்து மற்றெவரும் வண்டியைப்பார்க்க வேண்டாம்; நான் பார்த்ததே போதுமென்று மற்றவர்களோடு வாதாடி வண்டியை வெளியே அனுப்பிவிட்டான். அனுப்பும்பொழுது யாவரேனும் கண்டு கேட்டால், காவலாளர் அனைவரும் சோதனைசெய்தே வண்டியை வெளியில் விட்டார்களென்று சொல்லும்படி வண்டிக்காரனுக்கு திட்டம் செய்து அனுப்பினான்.

"அபயஸ்தம்"

புஷ்பகாண்டோத்தியானத்தில் சாருதத்தனும் மைத்திரேயனும் வசந்தசேனை வருவாளென்று வெகுநேரம் வழிபார்த்திருந்தனர். அப்படி யிருக்கையில் ஆரியனை ஏற்றிக்கொண்டு

வண்டிபோய்ச் சேர்ந்தது. சகடத்தைப் பார்த்துச் சாருதத்தன் வசந்தசேனை வந்தாளென்று சந்தோஷமடைந்து விரைந்தோடிவந்து வண்டியைத் திறந்தான். திறந்தவுடனே ஆரியகன் அவனே சாருதத்தனெனத் தெரிந்து அவனை அடைக்கலம் புகுந்து, அருள்புரிந்து என்னை இத்தருணத்தில் ஆதரிக்கவேண்டும், தமது வண்டியிலேறிவந்த பிழையை பொறுத்துக் கொள்ள வேண்டினன். அவனே ஆரியகனெனத்தெரிந்து சாருதத்தன் அவனுக்கு அபயமளித்து, அவன் தன் காலிலிருந்த விலங்கைத்தரித்துவிட்டு தன் வண்டியிலேயே ஏறிக்கொண்டு நகருக்கு வெளியே விரைவாய்ப் போய்விட வேண்டுமென்று சொல்லி அவனை அப்புறம் அனுப்பிவிட்டான்.

"அபசகுனங்கள்"

பிறகு சாருதத்தன் தோழனை நோக்கி, நேசனே, நாம் இப்பொழுது செய்தசெய்கை அரசனுக்கு சேர்விரோதமானது. இச்செய்தி இராஜனுக்குத் தெரிந்தால் அத்தனையும் அநர்த்தமாகும். இதுவும் அரசனுடைய தோட்டம். இனி நிமிஷங்கூட நாம் இங்கே நிற்கலாகாது. வசந்தசேனை என் வரவில்லையோ, அவளுக்காகக் காத்திருக்க முடியாதென்றான். உடனே அவர்கள் வீட்டுக்குப்போகப் புறப்பட்டார்கள். புறப்படும்பொழுது அநேக அபசகுனங்கள் ஆயின. அவற்றைக்கண்டு சஞ்சலமாகவே சாருதத்தன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

"குற்றமுள்ளநெஞ்சு குறுகுறுக்கும்"

இது இப்படியிருக்கச் சகாரன் "குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கு" மென்னும் வசனப்படி வசந்தசேனையைக் கொன்ற பழியை எவ்வாறு போக்குகிறதென்று அதேசிந்தை யுடையவனும், உடனே சாருதத்தன்மேல் பிரியாது செய்யும்படி அதிகாரிகள் வருவதற்கு முன்னமே நியாயஸ்தலத்திலே போய்க்காத்திருந்தான். நியாயாதிகாரியும் ஜூரியென்கிற மத்தியஸ்தர்களும் வந்து சேர்ந்தபிறகு வழக்கப்படி பிரியாதுதார் யாவரேனும் உண்டாவென்று விசாரிக்க, இதோ வென்று சாகரன் முன்னேபோய் நின்றான். அவன் வழக்கு எப்போதும் சிக்காயும் நியாயமற்றதாயுமே யிருக்குமேயென்று உணர்ந்து நியாயாதிகாரி இந்த விஷயம் நாளைக்காகட்டுமென்று தெரிவிக்க, மூர்க்கனான சகாரன் மிகக் கோபங்கொண்டு இன்று என் வியவகாரத்தை விசாரிப்பதில்லையா! நல்லது நான் இதோ என் உடன்பிறந்தாளிடம் சென்று, இவர்கள் அநியாயக்காரர்களென்று அறிவித்து இவர்கள் வேலையை வாங்கிவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன் என்று அட்டகாசம் செய்தான். அதுகேட்டு நியாயாதிகாரி, இவன் மூர்க்கன். அரசனும் அவசரக்காரன்; துஷ்டர்களைக்கண்டால் தாழ்ந்துதான் போகவேண்டும், என நினைத்து, அவன் பிரியாதை யேற்றுக்கொண்டான். சாகரன் அதுகண்டு முதலிலே நாளைக்காகட்டுமென்றவர்கள் நமது கோபத்துக்கு பயந்து இன்றே விசாரிக்கப் புகுந்தார்களல்லவா? இவ்வாறே இவர்களை முற்றும் வெருட்டி வியவகாரத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமென்றெண்ணி ஆனந்தமடைந்தான்.

"மூர்க்கப்பிரதாபம்"

அதன்பிறகு கொண்டுவந்த பிரியாது என்னவென்று விசாரிக்க, சகாரன் அதை நான் ஏகாந்தமாய்க் காதோடு சொல்லுகிறேன்; நான் யார் தெரியுமா? என்னுடைய தகப்பனார் அரசனுக்கு மாமனார். அரசன் என் தந்தைக்கு மருமகன். நான் அரசனுக்கு மைத்துனன், என் உடன்பிறந்தாள் அரசனுக்கு பட்டத்தரசி என்றான். நியாயசபை உத்தியோகஸ்தன், ஆயின் என்ன? இதில் உன் பெருமை யொன்றையும் காணோமே "என் தகப்பன் கூத்தாடி எனக்குப்பிச்சை போடு" என்பதுபோலிருக்கிறதே யுன் வாய்மொழி. குலம் எதுவானலென்ன

சரித்திரமல்லவோ சரியாக விருக்கவேண்டும். முதல்தரமான நிலத்தில் முட்செடிகள் முளைப்பதுபோல உத்தம குலத்தில் அன்பர்களும் உதிப்பதுண்டல்லவா? ஆதலின் இப்பொழுது அதைப்பற்றிப் பேசுவதிற் பயனில்லை; வியவகாரம் ஏதாவதுண்டானால் எடுத்துக்கூறலாமென, சகாரன், நான் இவைகளை விணுக்குச் சொல்ல வந்தவனல்ல நான் ஏதாவது குற்றஞ் செய்தாலும் நீங்கள்என்னை தண்டிக்கத் தகாதென்று எடுத்துரைத்தேன், என் பிரியாதென்னவெனில், நான் இஷ்டப்படி வளர்க்கவும் அழிக்கவும் அரசன் எனக்கே யுரியதாக புஷ்பகாண்டகமெனும் பழைய தோட்டத்தை அளித்திருக்கிறாரல்லவா? எனக்கு இஷ்டமானபோது நான் அத்தோட்டத்திற்குப் போய் வருவதுண்டு. அந்த வழக்கப்படி இன்று காலையில் அத்தோட்டத்துக்கு நான் சென்றிருந்த காலையில் பெண் பிணமொன்று அங்கே கிடக்கக் கண்டேன். அதன் வரலாற்றை விசாரிக்க வேண்டுமென்றான். அந்தப்பெண் இன்னாரென உமக்குத் தெரிகிறதாவென்று அதிகாரி கேட்க, சகாரன், தெரியாமலென்ன? நமது நகருக்கு ஒரு அற்புதமான அலங்காரமாயிருந்த வசந்தசேனை யென்னும் பெண்மணி, யாரோ ஒரு திருவற்ற தீயோன் அவளது பூஷணங்களைப் பறித்துக்கொள்ளப் பேராவல்கொண்டு அவளை யடித்துக்கொன்றான்; நான் அல்ல, என்று சொல்லி முகத்தை மறைத்துக் கொண்டான்.

### மூர்க்கன்பிராது.

நியாயாதிகாரி அது கேட்டு, காவலர்கள் தங்கள் காரியத்தில் கருத்தின்றி உபேக்ஷை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள் போலுமென்று சிந்தை கலங்கி, நல்லது இவர் சொன்ன வாய்மொழியால், "நானல்ல" என்பதை முதலிலெழுதிக் கொள் என்று லேககனுக்கு அனுமதி கொடுக்க அவன் அவ்வாறே பதிவுசெய்து கொண்டான்.

சகாரன் சற்று நிதானித்து "நானல்ல" வென்று சொன்னது சரியானதல்லவென்று தனக்குள்ளே தெரிந்து 'ஓகோ' என்னென்னவோ எழுதிக் கொள்கிறீர்களே. நானல்லது வேறு யாரும் அதைப்பார்க்க வில்லை யென்று சொல்லிக்கொண்டே காலால் உதைத்து லேககன் எழுதியதைக் கிழித்தெறிந்து விட்டான். நகைக்காகக் கொன்றதென்று உனக்கு எவ்வாறு தெரிந்ததென்று மறுபடியும் கேட்க, அவன் அவள் உடம்பில் கைகால் கழுத்து எவ்விடத்திலும் ஒரு நகையாவது இல்லையாதலால், அதற்காகவே கொலை செய்யப்பட்டவளென நான் கண்டறிந்தேன் என்றான்.

### விசாரணை.

அதுகேட்டு வசந்த சேனையின் மாதாவை வரவழைத்தே இது விஷயத்தை விசாரிக்க வேண்டுமென்று மத்தியஸ்தர்கள் கூற, அவ்வண்ணமே அவளை அச்சமுறுத்தாது மரியாதையாய் அழைத்து வரும்படி சேவகனை யனுப்பினார்கள். அவன் அப்படிபோய் அழைத்து வந்து அவளைச் சபை நடுவில் ஓராசனத்தில் உட்கார வைத்தான். உட்கார்ந்த பின்பு, அதிகாரி அவளைநோக்கி, நீயார்? வசந்தசேனை யுனக்கென்ன முறையாக வேண்டுமென்று கேட்க, அவள், வசந்தசேனை என் மகளென்று சொல்வார்களென்று சொன்னாள். இப்பொழுது உன்மகள் எங்கே யிருக்கிறாளென்று விசாரிக்கவும், அவள் தன் உயிர்த்தோழனான சாருதத்தன் வீட்டிற்குச் சென்றிருக்கிறாளென்றாள். உடனே சாருதத்தனை விசாரணைக்கு வரவழைத்தனர். அதுகண்டு சாருதத்தன் ஒரு பாபமுமறியாத புண்ணிய புருஷனாகையால், தன் வண்டியில் ஆரியகன் ஏறிவந்த செய்தி தெரிந்து அதைப்பற்றியே விசாரிக்க வரவழைக்கிறார்களோ வென்று சந்தேகித்துக்கொண்டே சென்றான்.

### நிஷ்களன்மேல் தோஷம்.

சாருதத்தன் நியாய சபையிற் சென்றதும், வசந்தசேனைக்கும் உமக்கும் நேசமுண்டா,

அவள் இப்பொழுது எங்கே யிருக்கிறாள், அவளைப்பற்றி ஏதாவது உமக்கு விசேஷந் தெரியுமா என்று விசாரிக்க, அவன் நேசமுண்டு, அவள் வீட்டிற்குப் போயினாள். அதுதவிர தனக்கு மற்றொன்றும் தெரியாதென்றான். இந்தமொழி கேட்கப்பொறாமல் சகாரன் எழும்பிக் குதித்து, புஷ்பகாண்டகோத்தியானத்தில் அருமை மகளை அநியாயமாய் உயிர் மாய்த்துவிட்டு, இப்பொழுது ஒன்று மறியேனென்று அபலாபம் செய்கிறாயா என்று இரைச்சலிட்டான். அதுகேட்டு சாருதத்தன் ஒன்றும் தோன்றாமல் திகைத்துப் போயினான். இதென்ன அநியாயமென்று வசந்த சேனையின் தாய்மனந் தவித்து நின்றான்.

"போய்க்கோட்டை"

இவ்வாறிருக்கும் சமயத்திலே காலையில் கோட்டைவாயிலிலே சந்தனகனால் பரிபவப்பட்ட வீரன் என்பவன் ஓடிவந்து, தான் காவலிருந்த வழியாய்ச்சென்ற வண்டியைச் சோதனை செய்யப்போகும் பொழுது, பார்க்கக்கூடாதென்று சந்தனகன் தன்னை யிழுத்துத்தள்ளி உதைத்தானென்று பிரியாது செய்தான். அந்த வண்டி யாருடையதென்று கேட்டதற்கு, சாருதத்தன் வண்டியென்றும், வசந்தசேனையை யேற்றிக்கொண்டு புஷ்பகாண்டக வனத்திற்குப் போகிறதென்றும் வண்டிக்காரன் கூறினானென்றான். அதுகேட்டு, நியாயாதிகாரி, நல்லது, உன்பிரியாது பின்பாகட்டும் நீ உடனே புஷ்பகாண்டக வனத்திற்குப் போய் அங்கேயேதாவது பணம் விழுந்து கிடக்கிறதா பார்த்துவா வென்று சொல்லி யனுப்ப, அவன் சித்தம் ஐயா என்று அதி சீக்கிரமாய்க் குதிரை மேலேறிச்சென்று பார்த்துவந்து, நாய் நரிகள் இழுக்க ஒரு பிணம் அங்கே கிடக்கிறதென்றான். இதற்குள் வசந்தசேனையின் வீட்டிற்கு ஆள் அனுப்பி அங்கேயும் அவளில்லை யென்று செய்தி தெரிந்துகொண்டார்கள்.

"அவஸரபுத்தி"

இது இப்படியிருக்க, காலையில் சாருதத்தன் தோட்டம்போய் திரும்பி வீட்டிற்கு வந்தபோது, வசந்தசேனை கொடுத்துப்போன பூஷணங்களைப் பார்த்து, அவற்றை அவளிடமே கொடுத்துவிட்டு வரும்படி மைத்திரேயன் வசம் அனுப்பியிருந்தான். அவற்றை யெடுத்துக்கொண்டு அவன் வசந்தசேனையின் வீட்டிற்குச் செல்லும்போது வழியே சாருதத்தன் செய்தியைக் கேள்வியுற்று, அப்படியே நகையும் கையுமாக நியாயஸ்தலத்துக்கு ஓடிவந்தான். அங்கே நடந்த நடத்தைகளைப்பார்த்து இத்தனையும் சகாரனால் விளைந்த விபரீதமென்று அவன்மேல் மிகக் கோபங்கொண்டு, இந்தச் சண்டாளனை யடித்துக் கொல்வதே சரியென்று எழுந்து சென்றான். அத்தருணத்தில் அவன் கையிலிருந்த ஆபரணமூட்டை கைதவறி விழுந்தது. சகாரன் உடனேயதை யெடுத்துப் பார்த்து, இவைதான் வசந்தசேனையின் அணிகள்; இவற்றின்மேல் ஆசைகொண்டே துண்டமும் பிண்டமு மில்லாத பிச்சைக்காரப் பையலாகிய இவன் அவளை அடித்துக் கொன்றான் என்றான். அவை வசந்தசேனையின் அணிகளேயென அவளுடைய அன்னையும் சாருதத்தனுங்கூட ஒப்புக்கொண்டார்கள். இவ்வாறு ஒன்றின்மேலொன்றாய் காலத்தின்கொடுமையால் தான் குற்றஞ்செய்தது நிச்சயமேயென நிரூபிப்பதற் கனுகூலமான அத்தாட்சிகள் உண்டாகி சகாரனது பொய்யான பேச்சு உண்மையென உறுதிப் படுவதையறிந்து, சாருதத்தன் ஒன்றும் தோன்றாது தலை குனிந்துகொண்டிருந்தான். அதுகண்டு மைத்திரேயன் உள்ளதை யுள்ளபடியே உரைத்து விடுவதைவிட்டு இதற்காக வீண் விசாரப்படுவானேன் என்றுகூற சாருதத்தன், நாம் ஏது சொன்னாலும் இச்சமயத்தில் ஏழை வார்த்தை அம்பலமேறாது; நமது ஏழ்மைதான்

வெளியாகும், அதைவிட மரணமே மேலான தென்று மொழிந்தான்.

"காலக்கோமை"

இவ்விஷயங்களைக் கேட்ட நியாயாதிகாரி, சாருதத்தன் இத்தன்மையாகப் பெண்கொலை செய்யத் துணிபவனல்லவென நன்றாய்த் தெரிந்திருந்தும், அதற்கு ஆதாரம் ஒன்றும் காணப்படாமையால், தீர்ப்புச் சொல்லும்படி நடந்த வர்த்தமானங்களை அரசனுக்கு எழுதியனுப்பிவிட்டான். அதைப்பார்த்து அரசன் இந்தப் பொய்க் கதையாகிய கடலைக்கடந்து உண்மையென்னும் அமுதத்தைக் கண்டறியும் வல்லமையற்றவனாகி, சாருதத்தன் உள்ளபடி உண்மைகளுக்கு ஆசைகொண்டு பெண்கொலை புரிந்தவனே யென நினைத்து, அந்த நகைகளை யெல்லாம் அவன் கழுத்திலேமாட்டிப் பறை யறைந்துகொண்டே பட்டணமுழுவதும் சுற்றி வந்து கடைசியில் தென் மயானம் கொண்டு போய்க் கொலைசெய்து விடவேண்டு மெனவும், இனி எவரேனும் இத்தன்மையான குற்றஞ் செய்வாராயின், அவரைக் கழுவிலேற்றித் தீர்த்தே சாத்திரம் அனுப்பிவிடவேண்டு மெனவும் தீர்ப்பு எழுதியனுப்பினன்.

"கோலக்கோலம்"

அந்தத் தீர்ப்பின்படியே சாருதத்தன் கொலையாளிகள் வசம் ஒப்பிவைக்கப்பட்டனன். அவர்களும் அவனுக்குக் கொலைக் குறியாகிய சிவப்புச் சந்தனம்பூசிச் செவ்வலரிப் பூமாலை சூட்டிக் கட்டி யிழுத்துக்கொண்டு தெருத் தெருவாய்ப் பறையறைந்து பிரசித்தப் படுத்திக்கொண்டே சென்றார்கள். சகாரனும் அவனைக் கொலைசெய்யும்போது வேடிக்கை பார்க்க வேண்டுமென்று கூடவே சென்றான்.

உண்மை யெப்படியும் வெளியாகும்.

சகாரன் வீட்டு வாயிலண்டை செல்லும் போது மேல்மாளிகையில் விலங்கும் காலுமாய் விழுந்துகிடந்த வண்டிக்காரன் தெருவிலுண்டாகிய கூச்சலைக்கேட்டு, ஐயோ, இதென்ன அநியாயமென்று மிகப் பரிதாபங்கொண்டு கீழே இறங்கிச்செல்ல காலில்லாமற் போகவே' உயிர்போனாலும் போகட்டும், உண்மையை வெளியாக்க வேண்டுமென்று, அங்கிருந்தபடியே எழும்பித் தெருவிலே குதித்தான். அது கண்டு இங்கிருந்தவர்களெல்லாரும் ஆச்சர்யமடைந்தார்கள். தெய்வச் செயலால் அவனுக்குச் சிறிதும் காயம் படவில்லை. கீழே குதித்தவுடனே வண்டிக்காரன், சாருதத்தன் மேல் சிறிதும் தோஷமில்லை; நானே பெரும்பாவி; மாறாட்டமாய் என் வண்டியிலேறிக்கொண்ட வசந்தசேனையை நான் பாராமலே வண்டியை தோட்டத்துக்கு ஓட்டிக்கொண்டு போனேன்; இந்தப்பாவி சகாரன் அவளைப் பிடித்துக் கொன்று விட்டுச் சாருதத்தன்மேல் பழிசுமத்தினன்; அச் செய்தியை நான் வெளியிடப் போகிறேனென்று பயந்தே இதோ எனக்கு விலங் கடித்திருக்கிறான் பாருங்களென்றான். ஆயினும் அவன் பேச்சும் பயன்படவில்லை: அண்டையிலிருந்த சகாரன், இவன் என்வீட்டில் களவுசெய்தான்; அதற்காக விலங்கடித்தேன். அந்தப் பகையினால் இவ்வாறு பிதற்றுகிறானேயல்லது வேறில்லையென்று சொல்லவே, அவர்கள் சரிதானென்று அப்புறம் இழுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

பொய் பொருந்தாது.

இது இவ்வாறிருக்க, சந்நியாசி மடத்துக்குச் சென்றிருந்த வசந்தசேனை அவ்விடத்தில் நடந்த உபசாரங்களால் உடனே உடம்பு தெளிந்தவளாகி, சாருதத்தனிடம் செல்லும்படி அந்தச் சந்நியாசியுடனே புறப்பட்டாள். புறப்பட்டு வீதிவழியாய்ப் போகும்போது மார்க்கத்தில் இந்தக் கொடிய செய்தி காதில் கேட்டது. அதைச் செவியுற்ற வுடனே அவ்வுத்தமி நடு நடுங்கி, ஐயோ, என்னைப் படுத்தினபாடு போதாதென்று என் பிராணநாயகனுக்கும் பொல்லாங்கிழைக்கத் துணிந்தானே பாவியென்று கூவிக் கதறிக்கொண்டு, கொலை பாதகர்கள்

அவனைப் பிடித்துக்கொண்டு போகுமிடநோக்கி வெகுவேகமாய்ச் சென்றாள். ஆயினும் அவள் போவதற்குள் அவனைக்கொலைசெய்யுமிடமான தென் மயானத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார்கள். இவள் அவ்விடம் போகும் பொழுது சாருதத்தனைக் கொல்வதற்காக கத்தியோங்குகிற தருணம்; முதலில் ஒருதரம் ஒருவன் கத்தியோங்கத் தெய்வச்செயலால் அது கீழே விழுந்துவிட்டது. அதுகண்டு அவன் மற்றொருவனை நோக்கி, ஏதோ இது இவனுக்கு நல்லகாலம்போல் இருக்கிறது; ஒருவேளை விடுதலையாகி விடுமோ என்னவோ வென்று வசவித்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் சந்நியாசியும் வசந்தசேனையுமாய் அதிவேகமாக அவ்விடம் ஓடிவந்து, வசந்தசேனை இதோ உயிரோடிருக்கிறாள்; அவளுக்காக உபகாரியான உத்தம புருஷனைக் கொன்று வீண்பழிக்கு ஆளாகாதேயுங்கள்; வேண்டாம், வேண்டாம் என்று கூவினார்கள். அதுகேட்டு யாவரும் திகைத்து நின்றனர். இவ்வுத்தம புருஷனை அநியாயமாய்க் கொல்லாமல் தப்பினோமே யென்று கொலையாளர்கள் மகிழ்ச்சிகொண்டு, அச்செய்தியை அரசனுக்குத் தெரிவிக்க ஓடினார்கள். வசந்த சேனையைப் பார்த்துச் சகாரன், தன் மோசம் வெளியாகிவிட்டது; இனி யிங்கிருந்தால் அபாயம் விளையுமென்று அறிந்து ஓடிப்போக வழிதேடினான். வசந்தசேனை சாருதத்தனைக் கண்ட வுடனே கண்ணுங் கண்ணீருமாய் அவன் கால்களில் போய்விழ, அவன் அவளையெடுத்து அணைத்துக்கொண்டு, என் கண்மணியே, எனக்குச் செய்திருக்கும் இக்கொலைக் கோலத்தைக் கண்டாயே; இவை யாவும் இப்பொழுது உன்னை உயிருடன் பார்த்த பிறகு மணக்கோலமாயின; கொலைக் குறியாய் அடிக்கும் இந்தப் பறையும் விவாஹத்துக்குரிய மங்கள வாத்தியமாகியது; இத்தனையும் நமக்குப் பகைவனும் மாபாவியுமாகிய சகாரனால் விளைந்த விபரீதங்களென்றான். பின்பு அவர்கள் எல்லோரும் ஒருவர்க்கொருவர் அவரவர் விர்த்தாந்தங்களை விவரமாய்ச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

"மெய்யேவெல்லும் பொய்யல்ல."

இப்படி யிருக்கும் சமயத்தில் அன்று காலையில் சிறையினின்று விடுபட்டுச்சென்ற ஆரியகன் தன்னை ஆபத்து வேளையில் ஆதரித்த உத்தமனான சாருதத்தனுக்கு வந்த விபத்தைக் கேள்வியுற்று உடனே தந்திரமாய் ஓடிவந்து, மதிகெட்ட மன்னனான பாலகனைக் கொன்றுவிட்டுத் தான் சிங்காதனமேறி, "நாம் சாருதத்தனை விடுதலை செய்தோம். உடனே அவரை இவ்விடம் அழைத்துவா வேண்டுமென்று கட்டளையிட்டு, சர்வலிகனை அவனிடம் அனுப்பினான். சாருதத்தன் வசந்த சேனையுடன் கூடிக் களிப்புற்றிருக்கிற சமயத்தில் அவன் அவ்விடம் போய்ச்சேர்ந்தான். அவன் அவர்களைப் பார்த்து அதிக சந்தோஷமடைந்து சகாரனை அவ்விடம் பிடித்து வரும்படி திட்டம் செய்தான். இவற்றை யெல்லாம் கண்ணுற்றிருந்த சகாரன் தனக்கு வேறுகதியில்லை யெனத் தெரிந்து தானே ஓடிவந்து, இப்பொழுது புத்தி வந்தது, இனிமேல் நான் எவர்க்கும் இப்படித் தீங்கிழைப்பதில்லை; அபயமளிக்க வேண்டுமென்று சாருதத்தனையே சரணமடைந்தான். சாருதத்தனுக்கு விதித்த தண்டனையை அவனுக்கு நிறைவேற்றிவிட வேண்டுமென யாவரும் அதிக ஆவல்கொண்டு, அவ்வாறே உத்தரவு கொடுக்கும்படி சாருதத்தனை வேண்டிக் கொண்டனர். "சாந்தனையும் தீயனவே செய்திடினுந் தாமவரை, ஆந்தனையுங் காப்பர் அறிவுடையோர்." ஆதலால், அவன் அதற்குச் சிறிதும் உடன்படவில்லை; அடைக்கலம் புகுந்தவர்களை யாதரிப்பதேயன்றி க்கவிடுவது கடமையன்று; தமக்கு அபகாரம் செய்தவனாயினும் அதற்குப் பிரதி நாம் உபகாரம்செய்வதே ஏற்ற தண்டனையாகுமென்று யாவருக்கும் நியாயமெடுத்தோதி, அவனை விடுதலை செய்யும்படி உத்தரவு பண்ணினான்.

இவர்கள் இவ்வாறிருக்கின்ற வேளையில் சாரு தத்தனைக் கொலைக்களத்துக்குக் கொண்டு போகிறார்களென்ற செய்தி கேள்வியுற்று, அவனுடைய கற்புடைப் பெண்டிரான தூதை யென்பவள் தீக்குளித்து உயிர்மாய்க்கச் சித்தமாயிருக்கிறாளென்று ஒருவன் ஓடிவந்து உரைத்தான். அந்தச்சொல் காதில் கேட்டவுடனே சாருதத்தன் சிந்தை கலங்கி அனைவரையும் அழைத்துக்கொண்டு அதி சீக்கிரமாய் அவளிடம் சென்றான். அப்பொழுது அவள் பெருந்தீ வளர்த்து அதில் குதிக்கத்துணிந்து கடவுளைத் தியானித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் சாருதத்தன் சென்று அவளைப் பிடித்திழுத்து, இதென்ன சாகஸம் செய்யத் துணிந்தாய், நான் உயிரோடிருக்கையில் நீ இவ்வாறு உயிர்மாய்க்கக் கருதலாமோ; குழந்தை யென்ன கதியாவானென நினைத்தாய் என்று சொல்லி அழைத்து வந்தான். அவளும் தன் பிராண நாதனைப் பணிந்து மிக்க மகிழ்ச்சி கொண்டாள். பின்பு யாவரும் ஆரியகனைப் போய் கண்டு களிப்புற்றார்கள். கடைசியில் இவ்வாறு சாருதத்தனுடைய தருமமல்லவோ தலைகாத்தது; வசந்த சேனையும் உயிர்த்தெழுந்தாள், சாருதத்தனும் கொலை செய்யப்படாமல் காக்கப்பட்டான், தூதையும் தீக்குளிக்காமல் தப்பிப் பிழைத்தாள்.

"ச தீ ம தி"

பிறகு உஜ்ஜயினீ நகரத்தில் ஆரியகனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. குசாவதி நகரத்திற்குச் சாருதத்தன் அரசனாகி அவ்விடத்தில் இனிது ஆட்சி புரிந்தான். இவர்களுக்குத் துணையாயிருந்த மற்ற யாவரும் அவரவர் திறமைக்குத் தக்கபடி ஏற்ற அதிகாரங்களில் நியமிக்கப்பட்டனர். அரசு செலுத்துவதும் வியவகாரங்களில் உண்மையைக் கண்டறிந்து நியாயத் தீர்ப்பு செய்வதும் எவ்வளவு கடினமானவை கண்டீர்களா? சாருதத்தன் ஒரு பாவமுமறியாத புண்ணியாத்துமாவாயிருந்தும் அவனே குற்றஞ் செய்தவனென்பதற்கு அனுகூலமாய் ஒன்றுக்கொன்று உபபலமாக அநேகம் அத்தாட்சிகள் அமைந்த வகையைப் பாருங்கள்.

"பொய்யுடையொருவன்சொல்வன்மையினால்
மெய்போலும்மேமெய்போலும்மே
மெய்யுடையொருவன்சொல்மாட்டாமையால்
பொய்போலும்மேபொய்போலும்மே—அதனால்,
இருவர்தஞ்சொல்லையுமெழுதரங்கேட்டே
இருவரும்பொருந்தவுரையாரையின்
மனுநெறிமுறையின்வழக்கிழந்தவர்தாம்
மனமுறமறுகிநின்றழுதகண்ணீர்
வழிவழியிலாவதோர்வாளாகும்மே."

—:o:—

## "Honi-Soit-Qui-Mal-y-Pense."
## கெடுவான் கேடு நினைப்பான்.

"கெடுவான் கேடு நினைப்பான்: படுவான் பாடுநினைப்பான்"
(ஒரு கதை.)

(284-வது பக்கத் தொடர்ச்சி.)

பின்பு அந்தத் தலைமையான தேனீ, மற்ற ஈக்களுக்கெல்லாம், உடனே ராஜாவினுடைய மாளிகைக்குப் போய் அங்குள்ள ஒவ்வொரு பொருளையும் கருத்தாய் உற்றுப்பார்த்து, அதன் படியே சிறிது கூட வேற்றுமையில்லாமல் மெழுகினால் அக்கோட்டையின் உருவமொன்று நிருமிக்கவேண்டுமென்று கட்டளையிட்டது. அப்படியே தேனீக்கள் யாவும், ராஜாவினுடைய கோட்டைக்குள் நுழைந்து அங்கே ஒருசிறிய ரந்திரங்கூட விடாமல் திட்டமாய் உற்றுப்பார்த்துக்கொண்டு, திரும்பித் தம்மிடத்திற்கு வந்து, அதேமாதிரியாய் அதிக சீக்கிரத்தில் மெழுகினால் பிரதிமை யொன்று செய்ய ஆரம்பித்து, அன்று பொழுது போவதற்குள் வெகு அழகாய்ச் செய்து முடித்தன. மறுநாட் காலையில் தையற்காரன் வந்து பார்க்க, ராஜா மாளிகையினுடைய வடிவத்துக்கு அணுவளவும் பேதப்படாமல் ஒரு மெழுகுப் பிரதிமை வெள்ளைவெளேலென்று வெகு விசித்திரமாய் முடிந்திருக்கக்கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு அதைப் பத்திரமாய்த் தன்மையில்போட்டுக் கட்டிக்கொண்டு அரசனுடைய அரண்மனைக்குப் போ

னன். அந்த அற்புதமான சித்திரத்தின் அழகைப் பார்த்தபோது அரசனுக்குண்டான ஆச்சரியம் இவ்வளவவ்வளவன்று; பின்பு தையற்காரனுடைய சாமர்த்தியத்துக்காக அவனை மிகவும் பெருமைப் படுத்தி, அவனுக்குப் பரிசாகச் சிறந்த மாளிகையுமொன்று கட்டிக்கொடுத்தான்.

இந்தச் சமாசாரத்தைக் கேட்டபோது தச்சனுக்கு எப்படியிருந்தது அறிவீர்களா? எரிகிற உடம்பில் எண்ணெயைக்காய்ச்சி ஊற்றினதுபோலிருந்தது. அதனல் அவன் எப்படியாவது தையற்காரனை அத்தேசத்தைவிட்டு ஓடிப்போகச் செய்யவேண்டுமென்று தீர்மானித்து, ஒருநாள் ராஜ சமுகத்துக்குப் போய், பிரபுக்களே ஒரு விசேஷம் கேள்விப் பட்டீர்களா? இப்பட்டணத்துக்கு நீர்க்குழாய் எங்கும் கிடையாதென்ற செய்தியைத் தையற்காரன் கேள்விப்பட்டு, நான் நினைத்தால் இவ்வரசனுடைய அரண்மனையை ஒரு நொடியில் ஜலதுர்க்கமாக்கி விடுவேனென்று தற்புகழ்ச்சி பேசுகிறன் என்றன். அதைக் கேட்டு அரசன் மிகவும் சந்தோஷப்பட்டு உடனே அந்தத் தையற்காரனை வரவழைத்து என் அருமை நேசனே இந்த நகரமுழுதும் நொடிப் பொழுதில் ஜலதுர்க்கமாக்கி விடுவேனென்று பெருமை பேசிக்கொண்டதாகக் கேள்விப்பட்டேன்; நீ அப்படிச்செய்ய வல்லவனென்பதற்குச் சந்தேகமில்லை. நாளைக் காலையில் இப்பட்டணத்திலெங்கும் மதுரமாய்த் தெளிந்த நீர்க்கால்கள் ஓடிக்கொண்டிருக்க வேண்டும்; இல்லாவிட்டால் நாளைப்பகலிலே நீ இந்தச் சபை நடுவில் உன் தலையை இழந்து விட வேண்டுமென்றன்.

இச் செய்தியைக் கேட்டபோது தையற்காரனுக்கு இன்னது செய்கிறதென்று தோன்றமல், ஒரு பெருந் திகில் உண்டாயிற்று. தனக்கு ஆயுள் முடிகிறகாலம் வந்துவிட்டதென்று முகவும் விசனமடைந்து, அவன் அப்பட்டணத்தை விட்டு அந்த க்ஷணமே அப்புறம் ஓடிப்போனன். கொஞ்ச தூரம் போய் தன் தலைவிதியை நினைத்து ஒரு மாத்தடியிலுட்கார்ந்து அழுதுக்கொண்டிருக்கையில், முன்பு அவனல் ஆதரிக்கப்பட்டு, இப்போது ஒரு சிறந்த குதிரையாயிருக்கிற குதிரைக்குட்டியானது அவனிடத்திற்குத் துள்ளி ஓடிவந்து, ஐயா, முன் நீர் எனக்குச் செய்த உதவிக்கு நான் பிரதியுபகாரம் செய்யும் படியான சமயம் இப்போது வாய்த்தது; நீர் விசனப் படுவதற்குக் காரணம் இன்னதென்பது எனக்குத் தெரியும், இனிநீர் விசனப்படவேண்டுவதில்லை; எவ்வளவு அசாத்தியமான காரியமாலும் நான் செய்து முடித்துத் தருகிறேன். இப்போது நான் உம்மைப்போல் நான்குபேரானலும் ஏற்றிக்கொண்டு போகும் வலிவுடையவனு யிருப்பதால், நீர சுகமாய் ஏறிக்கொள்ளலாமென்றது. அதைக்கேட்டு தையற்காரன் கொஞ்சம் விசனம் தெளிந்து அக் குதிரை மேல் ஏறிக்கொண்டான். உடனே அக் குதிரை அதிக வேகமாய் சவாரிசெய்துகொண்டு ராஜனுடைய கோட்டைக்குச்சென்றது. அங்குள்ள முற்றவெளியிலே அக்குதிரை வலசாரியாகவும் இடசாரியாகவும் மூன்றுதரம் அதிக வேகமாகச் சுற்றி சவாரி வந்து கடைசியில் கீழேவிழுந்தது; வீழ்ந்த வுடனே பயங்கரமான பேரோசையொன்று கேட்க, அப்போது பந்துபோன்ற ஒரு பொருள் பூமியைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டு ஆகாயதிலெழும்பி அக் கோட்டையை வளைத்துக்கொண்டது. அதே நிமிஷத்தில் மிகவும் மதுரமான தண்ணீர் அக்கோட்டையைச்சுற்றி யெங்கும் ஊறத் தலைப்பட்டு ஒரு பெரிய அகழிபோல அதைச் சூழ்ந்துகொண்டது. தெய்வத்தாலன்றி மற்றெவராலும் செய்து முடிக்சக் கூடாத அவ்வற்புதமான செயல் அத் தையற்காரனே செய்ததென்றெண்ணி, அரசன் மிகவும் ஆச்சரியப்பட்டு தன் சபைநடுவே அவனை வரவழைத்து, ஆனந்தபரவசனய் அவனைக்கட்டி ஆலிங்கனம் செய்துகொண்டு விசேஷமாக வெகுமதிகளும் கொடுத்தான்.

ஆயினும் அவனுடைய சங்கடங்கள் அவ்வளவோடு ஒழியவில்லை. இந்தத்தடவையும் தான் செய்த சூது அவனுக்கு நன்மையாகவே முடிந்ததெனக் கேட்டபோது, தச்சன் அவனிடத்தில் பின்னும் பதின்மடங்கு அதிகமாகப் பொருமை கொண்டு, இனி அவனை உயிரோடு வைப்பதே உசிதமல்ல வென்று யோசித்து மறுபடியொருநாள் ராஜசமுகத்துக்குச் சென்று, மகாராஜாவே, தாங்கள் கொண்டாடக் கொண்டாட தங்கள் தையற்காரனுக்கு அகங்காரம் அதிகப்பட்டுக் கொண்டேயிருக்கிறது; தேவலோகத்திலிருந்து தங்களுக்கு ஒரு திவ்ய குமாரன் கொண்டு வந்து கொடுக்கவும் அவனுக்குத் திறமையுண்டென்று அவன் பெருமைபேசிக் கொள்கிறன். (அவ்வரச

ற்று. அவ்விவாகத்துக்கு வேண்டிய தட்டுமுட்டுகள் யாவும் அம்மணமகனுக்குப் பகையாளியான தச்சனே கூலிக்குச் செய்துகொடுக்கும்படி நேரிட்டது. கலியாணமானவுடனே நடந்த நடத்தைகளின் உண்மை இப்படிப்பட்டதென்று அரசன் கேள்விப்பட்டு, மிக்க கொடியனான அந்த தச்சனை தேசத்தை விட்டு ஓடிப்போம்படி துரத்திவிட்டான். போகும்போது அவன் முன் தையற்காரனைத் தள்ளிவிட்டுவந்த தூக்குமரத்தின் வழியாய்ப் போகையில் அப்புறம் நடக்கச் சக்தியில்லாமல் இராத்திரி அதன் கீழேயே வீழ்ந்து கிடந்தான். அப்போது அங்கு வந்து தங்கியிருந்த தீர்க்க தரிசியான காக்கைகள் அவன் கண்களைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டன; பின்பு அவன் என்னகதியானானோ யாரும் அறியார்கள். பிறப்பிலே மிகவும் எளியனான அந்தத் தையற்காரன் தன் மனநற்குணங்களால் மிகவும் மேன்மையாக நெடுநாள் உலகங்களை யாதரித்து வந்தான். ஆகையால் தர்மமேஜெயம் என்றுள்ள முணரவுணர்ந்து உள்ளன்பால் உண்மைப்பூஜை செய்பவருக்கு வரும் ஆபத்தெல்லாம் அவர்கள் சாந்தத்தாலும் திருவருட் சிறப்பாலும் சம்பத்தாகும்.

"தர்மமேஜெயம்" என்றபிக்ஷைகேட்டேன்
தரணியிலே கலிமுற்றுங்காலமாச்சு!
பரணியிலே அதிஷ்டானங்கூடலாச்சு!
அரணியிலே அக்னியும் தோன்றலாச்சு!
ஆன்மாக்களீடேற மார்க்கங்கேண்மின்:—

"ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
"ஈசனோடாயினு மாசையறுமின்கள்
"பிக்ஷாடனத்திலும் பேதமறுமின்கள்
"மாசுபடிந்த மனத்தினுறவறுமின்கள்
"தூசுபடிந்த தபசிலன்தயவை யாவினுற்வெனவே
"..ண்டஞ்சி யோடிப் பிழைமின்! பிழைமின்குழை [யீரே!"]

உண்டுடுத்துறங்கு வஞ்சகநெஞ்சினருள்ளம்போல் நீல
கண்டங் கறுத்துள்ளம் நடமாடி காட்டியவழியிதுவே
நஞ்சுண்டஞ்சுண்டான் நெஞ்சுண்டெஞ்சிய தவுண் [டான்
கிகர்சொல்லிலா நித்தமுத்த நின்மலசித்தாவீரே."

—நாதசித்த நாமகள் சிலம்பொலி (திருவருட்சிறப்பு. மாயாஜாலம்.)

ஓம் தத்ஸத்.

## "Lack-a-Day! Thy Will be Done"

## "ஐயோ என் கண்ணே!"

—:(o):—

"ஏழைகளழுத கண்ணீர் கூறிய
வாளொடொக்கும்"—ஔவையார்.

"அடேய் அப்பா, குழந்தை யெங்கே காணவில்லையே!"

"அதோ உள்ளேயிருக்கிறான்."

"என்ன செய்கிறான்? கூப்பிடு."

"பையன் சோர்ந்து போய் அயர்ந்து படுத்திருக்கிறான். மூர்ச்சையாக விழுந்தவன்போல் முகம் தோன்றுகிறது. கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் வடிந்து சுவர்ந்திருக்கிறது."

இப்படி சம்பாஷித்துக் கொண்டிருக்கையில் உள்ளே அச்சரவம் கேட்டது. உடனே யது வீடெங்கும் பரவியது. "ஐயோ என் கண்ணே!" யென்று பெற்ற தாய் குழந்தையை யெடுத்து மடியில் வைத்துக்கொண்டு தவித்தாள்.

அதைக் கேட்டு தகப்பனார் "என்ன! என்ன!" வென்று ஓடிவந்தார். "குழந்தை மனமுடைந்து மூர்ச்சையாய்விட்டான்! காலை முதல் அலைந்த களைப்போடு மனக்கிலேசமும் சேர்ந்து கொண்டது. மூர்ச்சை தெளியவேண்டிய வகைபாருங்கள். எனக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. கைகால் பதறுகிறது. ஐயோ என் குழந்தை" யென்று தாயாரும் மூர்ச்சையானாள்.

"உன் குழந்தையென்று யாரடி சொன்னது? குழந்தையைக் கீழே விட்டுவிட்டு எழுந்து போ!" என்று அதட்டினார் பிராமணன்.

"எழுந்துபோ!" என்று கம்பீரமாக ஒரு அதட்டு அதட்டவே, தாயார் நடுநடுங்கிப்போய் விட்டாள். மெதுவாகக் குழந்தையைத் தரையில் வளர்த்திவிட்டு விசனம் பொறுக்காமல் அப்புறம் போய் அழுதுக்கொண்டிருந்தாள்.

II

"அடே அப்பா! ஏ, தம்பி!" என்று அய்யர் திடசித்தத்தோடு பையன் முகத்தைப் பிடித்து அசைத்தார். குளிர்ந்த ஜலம் கொண்டு கண்கள் முகம் முதலானதுகளைக் கழுவி மெதுவாகப் பையனை மூர்ச்சை தெளியவைத்து எழுப்பினர்.

பையன் மூர்ச்சை தெளிந்து எழுந்து வீட்டிலுண்டான கல்லலைக் கண்டு ஒன்றும் தோன்றாமல் திகைத்தான்.

"என்னடா அப்பா உடம்பில்? மனதில் என்ன கிலேசம்! உள்ளதை ஒளிக்காமற் சொல்லு! கள்ளத்தனமாய் ஒன்றும் சொல்லாதே!" என்றார் ஐயர்.

"இல்லை அப்பா! ஒன்றுமில்லை! என்னவோ துக்கம் பொறுக்க முடியாமல் வந்தது. அழுதால்தான் ஆறுமென்று அடக்க முடியாமல் அழுதேன். அப்படியே சோர்ந்து மூர்ச்சையாய்விட்டாற்போலிருக்கிறது. வேறு ஒன்றுமில்லை!" என்றான் பையன்.

"கிடக்கு, உடம்பு ஒன்றும் இல்லையே?"

"ஒன்றும் இல்லை! மிகவும் மனச் சோர்வால் தேஹம் அயர்ந்துபோகிறது. வேறு ஒன்றுமில்லை!"

"இன்று காலை முதல் உன் முகம் வாடியிருந்தது. ஏதோ கிலேசம் உள்ளிருந்து வாட்டுவதாகத் தோன்றுகிறது. உள்ளதைச் சொல், அதை மாற்றி விடலாம்!"

"ஒன்றுமில்லை! யிப்படிக் கஷ்டங்கள் ஒன்றின்மேலொன்றாக வருகின்றனவே. இப்படியும் கொடுமை யிழைக்கலாமா! வென்று நினைக்க மனம் சோர்ந்து போகிறது!"

"அப்பா, உலகத்தின் சுபாவம் உனக்கு இன்னும் நன்றாகத் தெரியவில்லை! அது போகிற வழியில் தான் போகும்; உலகத்தைத் திருத்த நம்மால் முடியாது. புத்தியோடு விவேகமுமிருந்தால் நமது மனத்தை நாம் திருத்திக்கொள்ளலாம்—வேறொன்றும் செய்ய நம்மாலாகாது. "எல்லாமீசன் செயல்" என்றறிந்தால் இந்த மனக்கிலேசம் நீங்கும்."

"ஈசுவர தர்மம் இதுதானா? இப்படித்தானா தர்மம் தலைகவிழ அதர்மம் தலையெடுக்க ஈசுவரன் ஆஜ்ஞை நடத்தவேண்டும்! "குதிரை தூக்கிப்போட்டதுமல்லாமல் குழியுமொன்று கூடப் பறித்த கதையாக வல்லவோ இருக்கிறது! தெய்வத்துக்குக் கண் இல்லையா?"

அப்பா குழந்தாய், அப்படி தெய்வத்தின் மேல் நொந்து கொள்ளாதே. ஈசுவரன் அந்தர்யாமியாக எல்லாருடைய ஹிருதயத்திலுமிருந்து எல்லாவற்றிற்கும் ஸர்வ சாக்ஷியாகவிருந்து வருகிறார். மாயையில் பிரதிபிம்பித்த காரணத்தால் இந்த பேதங்களெல்லாம் தோன்றுகிறது. வேறொன்றுமில்லை! வீண்கிலேசப்படாமல், மனதைத்திடப்படுத்தி உன் சோர்வுக்குக் காரணமென்னவென்று விசாரித்துப்பார். தைரியத்தைக் கைவிடாதே. தருமாம்பிகையே உனக்குத் தாயாகவிருக்க அதருமம் எப்படித் தலையெடுக்கும்? தலையெடுக்கிறதாக மனப்பிராந்தியால் உண்டாகிற பாவனையே யன்றி பாவனாதீதமான விடத்தில் ஒன்றுமில்லை.

"ஒருவன் துராகிருதமான செய்கை செய்துவிட்டு இப்படி தப்பிலித்தனம் செய்கிறானே! இது அடுக்குமா?"

"அடுக்கும் அடுக்காது! என்று சொல்ல நீயார்? நான்தான் யார்? அதற்கென்று ஒரு நியாமகன் ஏற்பட்டிருக்கும்பொழுது அந்த விசாரம் உனக்குமெனக்கு மென்னத்திற்கு?"

"அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்" என்கிற வாக்குப் பொய்யா?

"பொய்யல்ல! மெய்தான்! ஆனால் அரசன் என்கிற சப்தத்துக்கு நீ யென்ன அருத்தம்

செய்து கொள்கிறாய்? வீணாக ராஜாவாக விருக்கப்பட்டவன் தலையில் பழிபாவத்தைச் சுமத்தாதே!"

அரசன் என்றால் அரசியல் அல்லது ராஜதர்மம் என்றுதானே யருத்தம்?

ஆம் அரசியலின் லக்ஷணம் கூறி சநாதநமான தர்ம நெறியையுங் கூறினதன்றி வேறொன்று மில்லை!

"அரசன் அன்று கொல்லும்" என்றால் என்ன?

"இராஜ தர்மத்துக்கு லக்ஷணம் துஷ்ட நிக்ரகம் செய்தலாம், என்பதன்றி வேறொன்று மில்லை."

"தெய்வம் நின்றுகொல்லும்" என்றால் என்ன அருத்தம்?

அரசன் துஷ்ட நிக்ரகம் செய்ய ஆற்றாதவனயினும் அக்கிரமம் ஒருபோதும் நீடித்திருக்க மாட்டாது. ஏனெனில் வினை விதைத்தவன் வினை யறுப்பான். கர்மத்தின் தர்மத்தை மாற்ற யாராலும் முடியாது.

"கர்மத்தினுடைய தர்மம் என்ன? விளங்கச் சொல்ல வேண்டும்?"

கர்மம் என்றால் செய்வினை. இது திரிகரணங்களாலும் செய்யப்படும் வினைகளுக்குப்பொருந்தும்விதை விதைத்தால் அது விளைந்து அறுவடை செய்கிறதுபோல் கர்மத்துக்கு வித்தாம் வினை இயற்றினல் அது கட்டாயம் பலனைக் கொடுக்கும். நைஷ்கர்மஸித்தி பெற்ற ஒருவனை மட்டும் அது எப்போதும் பாதிக்காது. ஏனெனில் அவன் கர்ம பலத்தியாகியாக விருக்கிறான்.

பகவான் கர்மபலத்தியாகியை எப்போதும் காப்பாற்றுகிறார். "கடவுளை நம்பினர் கைவிடப்படார்."

"உலகத்தில் தர்ம ஸம்யுக்தர்களா யிருப்பவர்கள் கஷ்ட நஷ்டங்களையனுபவிக்க, அதர்மக்காரர்கள் மட்டும் ஆலவிருக்ஷம்போல் தழைத்தோங்கிப் படருவானேன்?"

அப்பா நல்ல லோகத்தைப் புடம்போடப் அது சுத்தியாகும். நல்ல மேலான தங்கத்தை போட என்னதான் உலையிலிட்டுருக்கினலும் அதன் மாற்று ஏறுமேயன்றி குறையாது. அப்படிப்போல தர்மவான்களுக்கு வரும் கஷ்டம் அவர்கள் தூய இருதயத்தை விளக்கி தர்ம வழியில் அவர்கள் நடத்தை பிரகாசிக்கச் செய்மேயன்றி வேறுவிதமான குற்றங்குறையேதும் அதுசெய்ய வாற்றலாது.

"தர்மவான்களுக்கு வரும் கஷ்ட நஷ்டங்கள் கஷ்ட நஷ்டங்களாகாவோ?"

விவகார தசையில் கஷ்ட நஷ்டமாகத்தான் படும். ஆனல் விவகாரத்திலும் விஷயப்பற்றை விட்டு விர்த்திஞானத்தையே பிரதானமாகத் தழுவி நின்றால், வரும் கஷ்ட நஷ்டங்கள் உலகத்தாருக்குத் தோன்றுவதுபோல் ஸ்வானுபூதி பெற்றவர்களுக்குத் தோன்றாது. கஷ்டமும் நஷ்டமும் மனப்பாங்கைப் பொறுத்ததன்றி, மனதின் சேஷ்டை யொடுங்கின விடத்தில் கிடையாது. "அலையு மனத்தை யடக்கி யாளக் கற்றால்" எல்லாத் துன்பமும் இன்பமாக முடியும். எல்லாம் மனோ சங்கல்பமன்றி வேறில்லை. மனதில் விகல்பமுண்டானல் எல்லா வில்லங்கமும் தோன்றும்.

விகல்பத்தை விட்டு நிர்விகல்பநிலைபெற்றால் மனம் சுத்த ஸ்படிகம்போல் ஸாத்விக மாத்ரமாய் நின்று ராஜஸதாமஸங்களின் சேர்க்கையால் வரும் குணதோஷங்களைத் தன்னில் ஒட்டாதவையாக நீக்கி, சாக்ஷிமாத்திரமாய் நிற்கும். அதைத்தான் மனச்சாக்ஷியென்று சொல்கிறது. மனச்சாக்ஷிக்கு விரோதமீ செய்பவர் படாத பாடும் பட்டுக் கெடாதபடி யெல்லாம் கெடுவர். இது சத்தியம். ஆனல் மனச்சாக்ஷி சுத்தஸ்படிகமான மனதில் தானேதானய்த் தனியிருந்து விளங்கும்பொழுது, அந்நிலையில் தானே அப்

பியாஸ முதிர்ச்சியால் நிலைத்திருக்க மாட்டாத வர்களுக்கு குணசம்பந்தத்தால் மனதுக்கு சலன முண்டாகி சங்கல்ப விகல்பங்கள் தோன்றும். அப்புறம் அநர்த்த பரம்பரைதான். ஆகையால் மனதை யெப்போதும் ஜாக்ரதையாக விருந்து சித்தவிருத்தி நிரோதஞ்செய்து அடக்கியாளல் வேண்டும். "லோகாந்தகுந்தம்" † போல் மனம் ஏகாக்ரப்பட்டுக் குவிந்த விடத்துத் தோன்றும் இஷ்டம் என்று சொல்லும் ஈசுவர சக்தியானது தஹரோபாஸனையால் அந்தர்யாமியாகி ஸர்வவியாபக சக்திபெற்று தானுடாது எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் சக்தி வாய்ந்ததாகும்.

இந்த சக்திக்குத்தான் அருட்சக்தி பென்று பேர்.

இது கொட்டுக் குந்தாலி பாறை யென்கிற மூன்றிற்கும் மேற்பட்ட வலிமை யுடையதாம்.

கொட்டு அதாவது மண் கொட்டு, மண்ணின் வலியைக் கெடுப்பதுபோல் பூதப்பிராந்தியை உண்டுபண்ணும் பிரகிருதிதத்துவத்தைக் கெடுக்கும் சக்தி யொன்றுண்டு. (கிரியாசக்தியாம்.) இது மண்கொட்டுக்கு சமானம்.

மரம் வெட்டும் குந்தாலி (கோடரி) மரத்தின் வலியைக் கெடுப்பதுபோல் ஜீவப் பிராந்தியைக் கெடுக்கும் சக்தியொன்றுண்டு. அது ஞானசக்தி யெனப்படும்.

ஸ்திரத் தன்மை பொருந்திய கல்லையும் பிளக்கும் கட்டப்பாரை ("கல்லிருப்புப்பாரை") சித்த விருத்திநிரோதத்தால் வித்திக்கும் யோக மாயையினால் உண்டாகும் வித்திவிளையாட்டுப் பிராந்தியைக் கெடுக்கும். இது இச்சா சக்தி யெனப்படும்.

இந்த மூன்றுக்கும் மேலாகவுள்ளது அருட் சக்தி.

இந்த அருட்சக்தி தானே பார்ப்பானுக்கு தீர்க்கமான தரிசனத்தைக் கொடுத்து அறிவை யளிக்கும் கண்ணும்.

"ஐயோ! என் கண்ணே!" என்றதால் ஸர்வ சாக்ஷியா யிருந்துகொண்டு எல்லார் வலியையும் கெடுக்கும் ஸர்வசக்தி வாய்ந்த என் கண்ணே! என்று விளித்து முறையிடு செய்துகொண்ட இரங்கல் விண்ணப்பமாம்.

"ஐயோ!" என்பது ஐம் சக்தியாம் வியஷ்டிப் பிரணவத்தோடு, ஓம் சக்தியாம் சமஷ்டிப் பிரணவம் சேர்ந்து அஹம் ப்ரஹ்மாஸ்மி யென்னும் மஹாவாக்கியத்தின் ஐக்கியத் தன்மையைக் குறிக்கும். மற்றது சுலபம்.

அப்பா! அந்த ஒரு விண்ணப்பம் தானே போதுமே! "தெய்வம் நின்று கொல்லும்" என்றால் அதற்கு இப்பொழுது வேறு அருத்தம் படுகிறது. இராஜதண்டனை கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் தெய்வதண்டனை சித்தமாய்க் கிடைக்குமென்பதே உறுதியாகப் படுகிறது.

"ஆனால் தெய்வம் எங்கேயிருக்கிறது? மனிதனுடைய இருதய கமலத்திலுள்ள தகராகாசத்தில் அசைவற்றாடுகின்ற அம்பலத்தாடியன்றி வேறுதெய்வம் எங்குமில்லை. அங்குமிங்கு மெங்கு முள்ளது அதுவே! ஆகையால் ஐயோ என்கண்ணே! திருச்சிற்றம்பலம் வாழ்க! உன் மனக்கிலேசத்தை விட்டொழிப்பாயாக!"

"தருமாம்பிகையாம் தாயவள் போற்றி" யென்னும் பாவால் திருவருட் சிறப்பைத் துதித்த ஸ்ரீ லோகநாயகியாம் உன்தாய் சொன்ன இந்த அருமை யுபதேசத்தை உள்ளத்திற் சிந்தித்து தியானசமாதியி லுண்மை யுணர்ந்து உள்ளந்தெளிய சாந்தோபசாந்தனுப் க்ஷமாபுத்திரனும் ஸம்பத்துப்பெற்று சாசுவதமான சுகவாழ் வெய்துவாயாக!"

† லோகத்திலுலான கட்டப்பாரை நுனியிலுள்ள கூர்முனை.

அகாரமாவ தைம்மூன் ருகு மப்பா
உகார மாவது மூவிரண்டாமே பிள்ளாய்
மகார மாவது மறைந்துள தொன்றேகேளாய்
அகார உகார மகாரம் சேர்ந்தது தம்பி
ஓம்கார ரூபமா முண்மைக்கிருப்பிடமது
ஐம்காரமாகியே ஐயைந்துக் கிடங்கொடுத்து
ஹ்ரீங்காரத்துள்ளே யினிதிருந்த தன்மையினால்
ஸ்ரீங்காரமான ஷட்விம ஜகபாவ மப்பா [த்து
ஹ்ரீங்காரி ஐங்காரியை ஸ்ரீங்காரிக்குள்ளே வை
ஸ்ரீங்காரி யைங்காரியை க்லீங்காரியோ டிசைத் [தால்
ஸௌபாக்கிய லக்ஷ்மியவள் தானேவந்து முன்னி [ன்று
ஓங்காரத்தோடென்னை யொன்றுபடச் சேர்த்துவை [ப்பள்.

ஓம் தத்ஸத்.

——:++:——

## "When the Grasshopper Becomes a Burden"

OR

### The Art of Gracefully Growing Old.

——:0:——

Speaking of "the saddest of all sad things," the sight of some who, growing old, fold their hands lamenting that they need rest, refusing to pick up their grasshoppers, or rather unable to do so because they had never rightly carried the earlier, the greater burdens of youth and of maturity, the author says: "These are they who carelessly or deliberately chose long years ago the roads of selfishness, the ideals of the human parasite., the poor wisdoms of the fool. "First I will make a fortune," an old classmate said to me, "and then, when I am fifty years old I will retire, and will do good with the money and enjoy myself." Alone he lived, alone he moiled, and alone he died having lost the power to think in terms of service, and public welfare." ... ... ...

"Thrice fortunate among men and women are those who learn early in the game that it is fun to work hard for something in which you believe—and for some one whom you love. It should be for both of these reasons because one alone is less than was meant. I have always thought the man who said to me, "I can take care of my own family; but let everyone else take care of his," was unconsciously a wicked person. There are those on the other hand, for whom all things are melted into their service of a chosen cause, and somehow they do not walk alone. Like the ancient athlete who daily lifted the calf until he found that he could run around the amphi-theatre with a full grown ox on his shoulders these enviable persons (such as Dr. Edward Everett Hale) can pick up greater burdens every day for years on years, until as with England's empire, the sun seems never to set on their joyous activities."—*The Public of Chicago.*

"Great men do not loose their Child Heart."

## "திடகாத்ர ஆயுராரோக்கிய சம்பத்து."

——:(✱):——

"திக்கெல்லாமாண்டவளே திகம்பரியே வாருமம்மா
முக்கோணசக்கரத்தில் முதன்மையாய் நின்றசக்தி
அக்கோணந்தன்னில்வந்து ஆச்சியரே வந்தமரும்.
தாயே துரந்தரியே சங்கரியே வாருமம்மா
மாயிமருளியரே மணிமந்திர சேகரியே
வல்லாண்மைக்காரியரே வழக்காடும் மாரிமுத்தே
வல்லவரைக்கொன்றாய்! வலியவரைமார்பிளந்தாய்!
நீலிகபாலியம்மா நிறைந்த திருச் சூலியரே
நாலுமூலையோமகுண்டம் நடுவே கனகசபை
கனகசபைவீற்றிருக்கும் காரண சௌந்தரியே!
காரணசௌந்தரியே நாரணனார்தங்கையரே
நாரணனார்தங்கையரே நல்லமுத்துமாரியரே
நடலைச்சுடலையம்மா நடுச்சுடலை தில்லைவனம்
தில்லைவனத்தெல்லைவிட்டு திரும்புமம்மா இந்த மு [சம்!
வார்ப்புச்சிலையாளே வச்சிரமணித்தோாளே
தூண்டில்துடைப்பருமன் தூண்டி முள்ளுகைப்பரு [மன்
மண்டையிலே தைத்தமுள்ளு மாருருவிப்போகுதம் [மா
பக்கத்திற்றைத்தமுள்ளு பதைத்துத்துடிக்குதம்மா
தொண்டையிலேதைத்தமுள்ளு தோளுருவிப்போகு [தம்மா
கத்திபோல்வேப்பிலையைக் கதறவிட்டாய்லோக [மெல்லாம்
ஈட்டிபோல்வேப்பிலையை யினியனுப்பிக்கொண்ட [வளே
பத்திரிக்குள்ளிருக்கும் பாவனையை யாரறிவார்!
வேப்பிலைக்குள்ளிருக்கும் வித்தைகளை யாரறிவார்!

✱ ✱ ✱

"சின்னாட்பல்பிணி மூப்புடன்கூடிய" இத்தேகத்தை அரோக திடகாத்திர ஆயுராரோக்கிய சம்பத்து வாய்ந்துள்ளதாய்ச் செய்வதெப்படி.? தஹிக்கப்படும் தன்மையுடையது தேஹம். அந்த தேஹத்தை ஊட்டிவளர்த்தபின் உலர்த்தி வற்றவிடவேண்டும். ஏனெனில் பிறப்புண்டானபோதே வளர்ச்சியுங்கூட வுதித்தது போல வளர்ப்புண்டானபோதே தேய்வும் கூடவுதித்

தது. சந்திரனின் வளர்பிறை தேய்பிறைகளைப் போல் இந்த தேஹம் வளர்வு தேய்வு என்கிற விகாரத்துக்குட்பட்டது. இதையே விருத்தி க்ஷயம் (Evolution and Involution) என்று சொல்லுவர் மேலோர். விருத்தி க்ஷயம் இரண்டிலும் பழகிய பின், லயம் என்பது இன்னவென்று அறியவேண்டும். ஏனெனில் காரணத்திலுற்பத்தியானது காரணத்தில்தானே லயிக்கவேண்டும். விருத்தி க்ஷய லயமாகிற இதையே Evolution Involution and Mergence என்று சொல்லுவர்.

பிராணன் கால்கட்டைவிரலிலிருந்து வலசாரி இடசாரியாக கத்திரிக்கோற் பின்னல்போல் இடம்மாறி ஆறுதாரங்களையும் சுற்றிக்கொண்டு உச்சியில் போய் நிற்கிறது. இப்படி பிராணன் வலசாரி இடசாரியாகமாறி ஏறி யிறங்குவதையே பிங்கலை இடகலையென்று சொல்லுவர்—இவைகளை சூரியநாடி, சந்திரநாடி யென்றும் சொல்லுவர். சூரியநாடி வழியாய்ப் பிராணன் மேலேறும். சந்திரநாடி வழியாய்ப் பிராணன் கீழிறங்கும். இவை இரண்டும் கத்தரிக்கோல் பின்னலாகப் பின்னிக்கொண்டிருக்கும். சூரியனுக்கு 'உஷ்ணகோ' என்றுபேர். சந்திரனுக்கு சீதகரண' என்றுபேர், சீதோஷ்ண மிரண்டும் அக்னியின் குணங்களாம். அக்னி சூடேற வேற சுவாலைவிட்டு எரியும். அக்னி குளிரக் குளிர தண்ணளியாகிக் குளிர்ந்தும் தஹிக்குந் தன்மை மாறுதிருக்கும். தஹிக்கப்படுவது தேகமாவதுபோல், தஹிப்பது அக்னியாகிறது. ஆகையால் அக்னியும் தேஹமும் காரண காரியமாம். தஹிப்பது காரணம் தஹிக்கப்படுவது காரியம். காரணம் மூவகைப்படும். கர்த்தா, கருவி, உபாதானம் என மூன்றுகும். கர்த்தா முதற்காரணம், கருவி துணைக்காரணம்; உபாதானம் காரிய காரணமாம். உபாதான மில்லாது காரியமாகாது—"சித்-அக்னி-குண்டம்" என்னும் இரகஸியநாமத்தில் சித் என்னும் சின்மாத்திரஸ்வரூபம் கர்த்தாவாகும். அக்னி யென்னும் சக்திஸ்வரூபம் கருவியல்லது துணைக்காரணமாகும். குண்டம் என்னும் உபாதானம் அல்லது இருப்பிடம் காரிய காரணமாகும்.

இந்த மூவகைக் காரணத்திலு மிருந்துண்டானது காரியப் பிரபஞ்சம். அந்தக்காரிய பிரபஞ்சத்துக்குள் அதற்குக் காரணமாயிருந்துகொண்டு அதிஷ்டானமா யிருப்பவள் திகம்பரை. இவளை "திக்கெல்லாம் ஆண்டவள்" என்றும் "திகம்பரை" யென்றும், "முக்கோண சக்தி" யென்றும், பலவாறு இரகஸிய நாமங்களால் தோத்தரிப்பர் மேலோர்.

ஸ்வகாரியப்புலிகளாய் ஸ்வயநயப்பாராட்டுவோர், தேஹத்தை வளர்த்து மாரிக்குப் பலி கொடுப்பர். பொதுவிஷயத்தில் பாடுபட்டுழைத்து ஸ்வாமிகாரியமே தன்காரியமாக வுழைப்பவர் தேஹத்தை பகவானுக் கிருப்பிடமாகச் செய்வர். "தேஹோ தேவாலயப்ரோக்த:" என்ற சுருதிவசனம் இவர்களுக்கே பொருந்தும். அதனுள்ளேயிருக்கும் ஜீவன் நரமாம்ஸ பிண்டாக்னியாகவின்றி "கேவலம் சிவஸ்வரூப"மாகும்.

இவர்கள்தான் வாழாமல் வாழும் மாட்சி பெற்ற மஹாத்துக்களாவர். இக்காலத்தில் எல்லாரும் பணம் சேர்க்கிற வழியைப்பார்! 50 வயதுவரையி லுழைத்துப் பணம் சேர்த்து வேணமட்டும் பணம்கிடைத்தபின் அக்கடா! வென்று உட்கார்ந்து அதை யனுபவிக்கலாமென்பர். ஆனல் 50–வயது வரையில் பணம் சேகரிக்கவென்றே யுழைப்பவன் ஹிருதயம் சுருங்கி நோய் பிணி பிடிக்கப் பாவம்! படாத பாடெல்லாம். பட்டு அற்பாயுவில் போய்விடுகிறுன். அல்லது பிழைத்திருந்தால் பூமிக்கு பாரமா யிருக்கிறுன்.

எவனும் பூமிக்கு பாரமாயிருக்கக் காரணமில்லை. பூமிபாரம் அதிகப்படுமாயின் பூதேவி

தாங்கமாட்டாது தவிப்பள். அப்பொழுது பூபாரம் தீர்க்கவென்று அண்ணல்வந்து அவதரிப்பர்.

அந்திகாலத்தில் ஆயுராரோக்கிய சம்பத்து வேண்டுமானால் பாலியத்தில்தானே ஊருக்குழைத்து உதாரகுணமும் படியக் கற்றுக்கொள்ள வேண்டும். கஷ்டப்பட்டுழைப்பதில் ஒரு சுகமிருக்கிறது. அதைக் கஷ்டப்பட்டுத்தேறினவர் அறிவார்களேயன்றி மற்றவர் அறியார்.

பொதுவுக்குழைப்பது பெருவிபத்தேயாயினும், அவ்விபத்துக்களைத தாங்கும் ஆற்றல் அஃதிலும் பெரிதாம். ஆகையால் ஆயுராரோக்கியம் பெற்று அந்திகாலத்தில் பூபாரமாயில்லாமல் சுகவாழ்வெய்த வேண்டுமானால் இளவயதில்தானே ஸ்வகய சிந்தையை விட்டொழித்துப் பரோபகார சிந்தையோடு பாடுபட்டுழைக்க வேண்டும். அப்படி யுழைப்பதில் வரும் இக்கட்டு வில்லங்கங்களைப் பொறுத்துழைப்பதால் பொறுமையும் திறமையும் வரவர அதிகரிக்கலாகும். அவதார புருஷர்களாய் அவதரித்தவர்கள் சரிதையை யாராய்ந்து பார்க்கில் அவர்கள் பால்யம்முதல் அபாரமான துன்பங்களுக்காளாய் அவைகளைக் கடந்து தேர்ந்தவர்களென்று நன்குக விளங்கும்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் கருத்தரித்தது முதல் அவருக்கும் அவரைப் பெற்றோருக்கும் நேர்ந்த கஷ்டங்களும் துன்பங்களும் எவ்வளவு பாருங்கள்!

காற்றைப் பிடித்தடைத்து மேன்மேலும் பாரமேற்றி அமுக்கினால் அது திரவமாகி ஜலரூபமாகிறது.

ஜலரூபமானாலும் அது அக்னிபோல் தஹிக்குந் தன்மையதாகவே யிருக்கிறது.

அதேமாதிரியாகப் பிராணன் சரீரத்தில் அதிகமாய்க் கஷ்டப்பட்டு அமுக்கப் பெற்றால் அது காற்றுரூபமா யிருப்பது உஷ்ணமாகமாறி ஜ்வரம் முதலான உபாதிகளை யுண்டுபண்ணிப் பின்னும் கஷ்டம் அதிகமாய் நெருக்குண்ட காலத்தில் அது திரவரூபமாக மாறுகிறது. அது அக்னித்திரவமேயாகும். இப்படிப்பட்ட அக்னித் திரவம் தேஹத்தில் மிருந்தால், அது கட்டை விரலிலிருந்து உச்சந்தலை வரையிலேறி முத்துமாரியாக வாரிக்கொட்டும். இதைத்தான் மாரியம்மன் என்று சொல்லுகிறது. ஏனெனில் இது சம்ஹாரசக்தி ஸ்வரூபமாம்.

சாகாமற் செத்துப் பிழைப்பதுபோல், தேஹத்தை வேகாமல் வெந்து தேறும்படி செய்யும் சக்தி யிதற்குண்டு.

மாரிமுத்து மேலே வாரிக்கொட்டினால் அக்னிரூபமான அந்த சக்தி உச்சிவரையிலேறிப் பின்னர் ஏறினபடியே இறங்கும்.

இதைத்தான் மாரிமுத்து ஏறி யிறங்குகிறதென்று சொல்வது. இந்த ஸம்ஹார சக்தி தேஹத்திற்றானே யிருந்து வருகிறது. இதை வர்ணித்து எழுத இங்கே யவகாசமில்லை.

அகச் சுருங்கில் "சித்-அக்னி-குண்டம்" நீற்று, நெருப்பெல்லாம் திரவமாக மாறிப்போம். இது தேஹத்தில் தானே யிருந்தால் தேஹம் அழுகிப்போம். முத்துமாரியாய் மேலேதோன்றி வெளிப்பட்டு விட்டால் அதன் உக்கிரம் குறைந்தபின், தேகம் வச்சிரமாகிப் புடம்போட்ட தங்கம் போல் மாற்றேறித் தெளியும்.

என்பாடு என்னோடே யென்றிருப்பவர்கள் வன்பாடு படவேண்டியதே.

இக்கொள்கையுள்ளவர்கள் சாய்காலும் செல்வாக்கும் பரவுவதால், மாய்காலம் கிட்டி மாரியம்மன் அதிகாரம் தோன்றலாகின்றது—ஆகையால் ஸ்வயநலத்தைவிட்டுப் பிறர்நன்மைக்காகவே யுழைப்பவர் பெருமையே பெருமை, அவர்கள் வாழ்வே வாழ்வு.

ஓம் தத்ஸத்.

——:(*):——

## The Boon of Grace from the Bull-Mounted Mother.

### வ்ருஷபவாகனுருடை வரப்பிரஸாதம்.

———:(●):———

I

வ்ருஷப வாஹன மேறியவுன் திருக்
கோல மஹிமையை யாரறிவார் !
தாயேசரணம் சரணமுன் செவ்விய
பாதார விந்தமேசரணம் ! காத்தருள்வாய் !

II

பால்குணமேறிய பங்குனி மாசத்தில்
பால்மணமருவுன் திருவருட் சேய்க்கம்மே
மாலயன்காணா வடிமுடி காணவே
வேலொடுகோல்தாங்கும் திருமுருகன்தாள் துணையாமே !

III

காலொடுதீயும் நிலமொடுநீரும் சேருமாபோல்
வேலொடுமயிலும் காலொடுதலையும் சேரவம்மே
வாலொடுபிறந்த வாத்ஸல்யபுத்திரனா மாஞ்சநேயர்
பாலொடுபழம்போல் வாலொடுகால்சேரும் விந்தையாரே !

IV

விந்தையிதம்மா ! வித்தையிதம்மா ! சிந்தையிறந்தாற்கு
எந்தைபிரானன்றி விந்தையுமில்லை சிந்தையுமில்லை !
விந்தையும் சிந்தையு மெந்தைபால் செய்யுமுன்
விந்தையில்விந்தையாம் விந்தையிலாச் சிந்தைதந்தருளே !

V

நொந்தேனெனவோ நான் வெந்தேனெனவோ !
தந்தேனென்னையுனக்கன்றே யல்லவோ எந்தைகாண !
வந்தேமாதர மென்றுன்னை வழுத்தித்தொழுதபின் னென்னெஞ்சம்
வெந்தாலும்நொந்தாலும் தந்துபோலுன்னையே சுற்றிநிற்கும் !

VI

வ்ருஷப வாஹனமேறிய வுன்திருக்
கோல மஹிமையை யாரறிவாரென்
றுன்னினே னுள்ளத்துன் திருவுருவைப்
பன்னினேன்பாடலும் பரமேஷ்டி துணையென்றே !

VII

துணையென்றுன்னையான் தாயவென்னிதயத்தில்
பிணையாகக்கொண்டம்மே பிரார்த்தனைசெய்யுமுன்
கணையாழி கண்டவச் சீதைமனம்போலே
துணையாகத்தந்தவுன் வெண்தாமரைப்பாத-மலர்கண்டுமகிழ்ந்தேனம்மா !

VIII

மகிழ்ந்தேன்குழந்தைவேல் மாயாவியுன்லீலை சொல்லறியேன் !
புகழ்ந்தேன்குழந்தைவேல் புநிதையேயுன்னருள்தந் தெனைக்காத்திடுவாய் !
இகழ்பாவனர்செய்யுங் கொடுமையெலா முனக்கேச்சல்லவோ !
இகழ்புகழிகழானாலும்புகழானாலு முன்னருள்முன்னெல்லாம் மகிழ்வேயன்றோ !

ஓம் தத்ஸத்.

## At the Altar-Fire of Consciousness.

### "Vox Populi Vox Dei."

MOTTO:—(1) "Behind all experiences moves one Great aspiring Power, developing and perfecting the World."

(2) "Every slight experience will teach us something if we question it, and will yield its message of Hope."

(3) "There is a Power on Earth greater than Parliament or King and that is the Voice of Consciousness."

## THE HOLY RESPONSE.

### [Sequel to "the Wife's Lament and Sati's Prayer."]

Within *forty-eight hours* of the heart-melting cries and lamentations which rent the air in what may be called the "White-Friars" of South Madras "in this city of intrigue" —forlorn and faithless alas! to its own *true self*—"the Wife's Lament" has reached the straining ears of Britannia Fair nestling far away in her Island Home; and She, the theme of "Rule Britannia, Rule!" has with her accustomed tone and inherent voice of diginty, sent this Holy Message of Hope to the oppressed through channels peculiarly her own. "Let the Current knows its Way."

It is extracted from a communication bearing date 6th February, and posted, be it noted, exactly at the hour when, 48 hours previous, the Cry of distress addressed to the Goddess of wife-hood came out to impress itself on the sands of Time, Seven thousand miles away from where the writer of this Divine Message of Hope was physically present. We feel ourselves in duty bound to place it reverently at the Altar of Public Opinion in obedience to that soul-stirring call of Social Duty, which the Viceroy with the Voice of Faith uttered in pain and sorrow with his hand held up in a sling. God grant that the strangled voice of Public Life may yet gather strength from the Inner Voice of Consciousness and assert itself above the over-powering influences of Intrigue and what not, is the earnest and heart-felt prayer of all true men which they hope to see realised.

"My dear Mr. Swaminatha Aiyar,—I was interested in all that you told me of your experiences some of which have been the very reverse of agreeable. I am quite sure that you stand high in the estimation of those of your fellow-townsmen who know your work and your zeal for the public good. Unfortumately those who devote their time and energies to the public without seeking reward, very often experience opposition from those who know nothing of self-denying effort. It is very ignoble that persons who have only their own private interests to serve, should not only not be content to leave men with public interests to carry out their ideas without interference, but should place themselves in active opposition to public benefactors.

"I hope the New Year has opened auspiciously with you and that those who have hitherto caused you trouble, will no longer interfere with you.

"I trust you will find encouragement in your work from Lord and Lady Pentland, who have ever been known to side with those who have the interests of the public at heart.

"Thanks for the copy of "the Divine Song of Empire" and all the other slips you sent me along with the November *Virekachintamani.—With all good wishes.......* .."

## The "Vivekachintamani"

The October number of this interesting and instructive Tamil Magazine opens with a spirited article which affirms the truth of the principle in the Maxim "the undedicated life and undisciplined mind lead to evil." It is followed by an interestihg sketch of Sri Sankara "The Orphan's Cry" is highly spiritual in its tone as also the article on A O. Hume. Under the headline "The Kinglom of God within,"the Origin of Life"is discussed with an intellegent grasp of the first principles involved. Other articles of interest are :—"Wisdom is all-powerful," the constitution of Man; Easy Lessons in Economics; Historical Selection; and Gleamings from Folklore.

The magazine, we are glad to note, is maintaining its unique position as a journal of recognised spiritual and moral force, and we foresee a large scope for its usefulness in the moral and spiritual line, in which it stands foremost. The publishing agency deserve a word of commendation for their zeal in working up the journal to its original position—*The Indian Patriot.*

## Press Opinions on the Viveka Chintamani.

—:-i—

THE "VIVEKA CHINTAMANI."—This useful and interesting Tamil Magazine for December opens with an article on the Principles of Progress, reviewing Professor Henderson's last lecture in Madras. It is followed by an article on the 'Origin of Life' in its collective aspect and another on 'Kartikai Festival.' The verses celebrating the birth of Kumara under Kumarasambavam are touching. The magazine is as usual full of a number of other interestin stories and contributions keeping its position as the olde and the best Tamil monthly in Madras.

*The Madras Standard Dec. 13.*

The magazine is.........keeping up its position as the oldest and the best Tamil Monthly in Madras."

*—The Indian Patriot.*